# பகவத் பாதை




• மலர் : 2 இது ஒரு பகவத் மிஷன் வெளியீடு • சேலம் • செப்டம்பர் 2013

• இதழ் : 12 • மாத இதழ் • தனி இதழ் ரூ. 10/- • வருட சந்தா ரூ. 100/-



நினைவையும், சிந்தித்தலையும் நாம் புரிந்து கொண்டு, நினைவுகளில் குறுக்கிடத் தேவையில்லை என்பதை புரிந்து கொள்ளும்போது அனைத்து தீர்வுகளும் தாமாக ஏற்படுகின்றன.

- ஸ்ரீ பகவத்



## நினைவும் சிந்தித்தலும்

## Thought and Thinking

- **ஸ்ரீ பகவத்**

அவர் ஓர் அலுவலகத்தில் பணியாற்றும் ஒரு அலுவலர். ஒருமுறை அவரது அலுவலகத்தில் மூத்த அதிகாரியின் தலைமையில் அலுவலர்கள் கூட்டம் ஒன்று நடந்தது. கூட்டம் நடந்து கொண்டிருந்த நிலையில் அன்பருடைய கைபேசியில் அழைப்பு ஒன்று வந்துள்ளது. கைபேசி ஒலிக்கவும், இந்த அன்பர் அதனை உடனடியாக நிறுத்திவிட்டார். ஆனாலும், மூத்த அதிகாரி இவர் மீது நடவடிக்கை எடுத்துவிட்டார். கைபேசியை அணைத்து வைக்காமல், கூட்டத்தில் எப்படிக் கலந்து கொள்ளலாம் என இவர் மீது குற்றஞ்சுமத்தி இவரை வேறு ஒரு ஊருக்கு மாற்றல் உத்தரவு போட்டுவிட்டார். இவருக்கு மனவேதனை. நடந்ததை நினைத்து தூக்கமில்லாமல் சிரமப்பட்டுக் கொண்டிருந்தார்.

சிறிய தவறுக்கு பெரிய தண்டனை எப்படிக் கொடுக்கலாம் என மனதுக்குள் மருவிக் கொண்டிருந்தார். மனவேதனை அவருக்கு நீடித்து வந்ததால், நம்மிடம் தீர்வு கேட்டார். அப்போது அவருக்கு அது பற்றி விளக்க நேர்ந்தது.

ஒரு நிகழ்ச்சியானது, நடந்து முடிந்துவிட்டது. அது நமக்குப் பிடிக்காத நிகழ்ச்சியாக இருந்ததால், அதைப்பற்றிய நினைவு (Thought) நம்மையறியாமல் மீண்டும் மீண்டும் வந்து கொண்டிருக்கிறது. நாமாக விரும்பி சிந்திக்கவில்லை. அந்த நினைவு நம்மையறியாமல் நமக்கு ஏற்பட்டு நம்மைத் தாக்கிக் கொண்டிருக்கிறது.

அது அப்படி ஏற்பட்டு நமது மன வருத்தத்தைக் கிளறிக் கொண்டிருக்கிறது. ஆனால் இந்த நினைவு நம்மையறியாமல் ஏற்படுவது; நாமாக இந்த நினைவைக் கொண்டு வரவில்லை. இதுதான் நினைவு. இது அதுவாக ஏற்பட்டது. இதுதான் நினைவு இதுதான் Thought. இதற்கு நாம் பொறுப்பு கிடையாது. இதற்கு நம்முடைய உணர்வுப்பூர்வமான பங்களிப்பு எதுவும் கிடையாது.

இக்கட்டுரை பலரது பிரச்சனைகளுக்கு நிரந்தர தீர்வாக அமைந்துள்ளதால் அன்பர்கள் பலரின் வேண்டுகோளுக்கு இணங்க ஏற்கனவே வெளிவந்த இக்கட்டுரை இந்த இதழில் மறுமுறை பிரசுரிக்கப்பட்டுள்ளது. இக்கட்டுரையின் ஆங்கில வடிவமான "Thought and Thinking" மார்ச் - 2012 மாதத்தில் வெளியாகி உள்ளது என்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

அந்த நினைவு ஏற்பட்டதும், பிறகு நாமாக அதில் பங்களிக்க ஆரம்பிக்கிறோம். அவர் இப்படி நடந்து கொண்டது சரியில்லை. அவரை விடக்கூடாது. இப்படி நாமாக சிந்தித்துக் கொள்கிறோம். இதுதான் Thinking. இப்படி நாம் சிந்தனை செய்வதால் நமக்கு மன அழுத்தம் அதிகமாக ஆரம்பிக்கின்றது.

இரவில் தூக்கம் வருவதில் சிரமம் ஏற்படுகின்றது. தேவையில்லாமல் அதைப்பற்றியே சிந்திக்கின்றோம். தூக்கம் கெடுகிறதே என்று சிந்திக்கின்றோம்.

நமது சிந்தித்தலில் (Thinking) நமது பங்களிப்பு உள்ளது. நமது (Thought) நினைவில் நம்முடைய பங்களிப்பு கிடையாது. நினைவுகள் அனைத்தும் நம்மையறியாமல் ஏற்படுகின்றன. ஆனால் அப்படி ஏற்படும் நினைவுகள் மற்றும் அவற்றால் ஏற்படும் உணர்வுகளின் ஆயுள் வெறும் அரை வினாடிதான்.

சிந்தித்தல் அப்படியல்ல. சிந்திப்பவைகளை நாமாக ஏற்படுத்துகின்றோம். நாமாக பங்கேற்றுச் சிந்திப்பதால், நமது நினைவும் உணர்வும் புதுப்பிக்கப்பட்டு விடுகின்றன. தாமாக மறையவேண்டிய நினைவுகளும் உணர்வுகளும் மீண்டும் உயிர் பெற்றுவிடுகின்றன.

அந்த அன்பருக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை அதிகபட்சமாக இருக்கும் பட்சத்தில், அவர் அதனை சட்ட பூர்வமாக அணுகலாம். மேல் முறையீடு செய்து கொள்ளலாம். அப்படிப் புறச்செயல்களில் ஈடுபடுவது சம்பந்தமாக அவர் சிந்தித்துத்தான் ஆகவேண்டும். செயல் நிமித்தமாக சிந்தனை செய்வதில் தவறு எதுவும் கிடையாது.

ஆனால் நடந்து முடிந்த ஒன்று இப்படி 'நடந்திருக்கக் கூடாது' என்ற ரீதியில் சிந்தனை செய்வது தேவையற்றது. அதுதான் நமது மனோரீதியான பிரச்சினைகளுக்கெல்லாம் காரணமாகிறது. அதைப் பற்றிய நினைவுகள் இயற்கையானது; குற்றமற்றது. அவை தாமாக ஏற்படுகின்றன. நம்மையறியாமல் ஏற்படுகின்றன; தாமாக மறைந்துவிடும்.

ஆரம்பத்தில் ஐந்து நிமிடங்களுக்கு ஒருமுறை ஏற்படலாம். நாம் அதை சிந்தித்தலாக மாற்றாத பட்சத்தில், அதன் வேகம் குறைந்து விடும். பிறகு 10 நிமிடங்களுக்கு ஒரு முறையோ அதன் பிறகு 20 நிமிடங்களுக்கு ஒரு முறையோ ஏற்படலாம். பிறகு சிலமணி நேரங்களுக்கு ஒருமுறையோ, சில நாட்களுக்கு ஒருமுறையோ ஏற்பட்டு அதன்பிறகு அது ஏற்படாமலேயே போய்விடலாம்.

ஆனால் நாம் அதில் பங்கேற்று அதை சிந்தித்தலாக (Thinking) மாற்றிவிடும் போது அது தாமாக மறையாது. அது ஆத்திரமாகவும் வெளிப்படலாம். அல்லது மாறாத வன்மமாக நம்மிடம் குடியேறிவிடவும் செய்யலாம். அது நினைவாக மட்டும் இருக்கும் பட்சத்தில், அது ஒருபோதும் வன்மமாக மாறாது. உணர்வுகள் அனைத்தும் வெளிப்பட்டு மறைந்துவிடும். ஆனால் வன்மங்கள் அனைத்தும் மறைந்திருக்கும் நிலையில் பழிவாங்கத் துடித்திருக்கும்.

ஒருவரை 'விடக்கூடாது' என்று மீண்டும் மீண்டும் சிந்திப்போமானால் அதுவே வன்மமாக நமக்குள் பதிவாகிவிடும். நமக்குப் பாதிப்பை ஏற்படுத்தியவர் மிகப்பெரியவராக இருந்து, அவரைப் பழிவாங்குவது நமக்கு சாத்தியமே இல்லாத பட்சத்தில், நமது வன்மம் நமக்குள் ஒரு அவநம்பிக்கையையும், தாழ்வு மனப்பான்மையையும் ஏற்படுத்திவிடும்.

நினைவுகளால் நமது இயல்பில் எந்த மாற்றமும் ஏற்படுவதில்லை. ஆனால் உணர்வுபூர்வமான நமது சிந்தித்தலின் (Thinking) காரணமாகவே நமது இயல்பில் மாற்றங்கள் ஏற்படுகின்றன. நமது இயலாமையை நினைத்து மருகும் ஒருவர் மனநோயாளியாகிவிடுகின்றார். துன்பம் கொடுத்தவரை 'விடக்கூடாது, விடக்கூடாது' என்று சிந்தித்துக் கொண்டிருப்பவர் குதர்க்கவாதியாகவும், பிரச்சினை மிகுந்தவராகவும், வன்முறையாளராகவும் மாறிவிடுகிறார்.

புறச்செயல்கள் அனைத்தையும் நாம் சிந்தித்து தான் செயல்படுத்த வேண்டும். சிந்திப்பது என்பது நமக்குக் கட்டுப்பட்டது. நினைவு நமக்குக் கட்டுப்பட்டதன்று. புறச் செயல்களைப் பொறுத்த அளவில் சிந்திப்பது இன்றியமையாதது. சிந்திக்காதவாறு மனம் போனபடி செயல்படமுடியாது. புறச்செயல்கள் அனைத்தையும் சிந்தித்துத் தான் செயல்படுத்தவேண்டும். புறச் செயல்களைப் பொறுத்த அளவில் நல்லது-கெட்டது உண்டு; உயர்ந்தது தாழ்ந்தது உண்டு; செய்ய வேண்டியது, செய்ய வேண்டாதது உண்டு. சிந்தித்தலைப் பொறுத்த அளவில் இத்தனை வேறுபாடுகளும் உண்டு. அதன் அடிப்படையில் தான் நமது செயல்கள் வெற்றிபெறும். அகச் செயலைப் பொறுத்த அளவில் நல்லது கெட்டது கிடையாது. உயர்ந்தது தாழ்ந்தது கிடையாது. தேவையானது தேவையற்றது கிடையாது.

நினைவுகள் தாம் அகச்செயல். அவற்றில் இந்தப் பிரிவுகளோ, பாகுபாடுகளோ கிடையாது.

இத்தகைய பிரச்சினை ஒன்றுடன் மருத்துவர் ஒருவர் தனது துணைவியுடன் நம்மைச் சந்தித்தார். அவர்களுக்கு ஒரே குழந்தை, அந்தக்குழந்தை 2 வயதில் இறந்து போய்விட்டது. அது நிகழ்ந்து சில மாதங்களுக்குப் பிறகு நம்மைச் சந்தித்தார்கள். மருத்துவர் கூறினார்: "எங்கள் குழந்தை இறந்தது எங்கள் வாழ்க்கையில் நிகழ்ந்த மாபெரும் துயரம். நான் என்னை ஓரளவு நிலைப்படுத்திக் கொண்டேன். ஆனால் எனது மனைவியால் இன்னும் அந்த வேதனையிலிருந்து விடுபடமுடியவில்லை. அது அவருக்கு உடல் ரீதியாகவும், மனோரீதியாகவும், பல பிரச்சினைகளைக்கொண்டு வர ஆரம்பித்துவிட்டது. மனோதத்துவ நிபுணரைச் சந்தித்தும் தீர்வு கிடைக்கவில்லை. இந்தப் பிரச்சினையை நாங்கள் எப்படி அணுகுவது?"

இந்தப் பிரச்சினையிலும், அவர்கள் புரிந்து கொள்ள வேண்டியது "நினைவு என்றால் என்ன, சிந்தித்தல் என்றால் என்ன" என்பது தான். இதுபற்றி அவர்களிடம் உரையாடினோம். "உங்களுடைய குழந்தை இறந்து போனது மாபெரும் துயரம். அதனால் அதைப்பற்றிய நினைவுகள் மீண்டும் மீண்டும் ஏற்படுவதும், அதனால் துயரமான உணர்வுகள் ஏற்படுவதும் தவிர்க்க முடியாத ஒன்றுதான். ஆனால் அவை வெறும் நினைவுகளாக மட்டும் இருப்பதில் எந்தப்பிரச்சினையும் கிடையாது. நினைவுகளை, சிந்தித்தலாக மாற்றும்போதுதான் பிரச்சினை. Thought -ஐ Thinking -ஆக மாற்றும் போது தான் பிரச்சினை....." உங்கள் வாழ்க்கையில் நிகழ்ந்த துயரமான சம்பவத்தின் நினைவு உங்களுக்குள் உங்களையறியாமல் ஏற்படுகிறது. 'குழந்தையை இழந்தது மாபெரும் இழப்பு. அதைப்பற்றி நினைத்து துயரப்படுவதுதானே நியாயமானது. துயரப்படாமல் இருப்பது தான் நியாயமற்றது' - இப்படி நாம் நமது நினைவுகளை நியாயப்படுத்துகிறோம்.

அப்படி நியாயப்படுத்துவதன் மூலம், நாம் நமது நினைவுகளை சிந்தித்தலாக மாற்றிவிடுகிறோம். Thought-ஐ Thinking-ஆக மாற்றி விடுகிறோம். இதனால் தாமாக ஏற்பட்ட நினைவுகளில், நாமாக முன்வந்து பங்குபெற ஆரம்பிக்கின்றோம். நம்முடைய துயரத்தை நாமே மனமுவந்து ஏற்றுக் கொள்கிறோம்.

ஆனால் அந்தத் துயரத்தையும் நம்மால் தாங்க முடியவில்லை. இதயத்துடிப்பு அதிகமானது நம்மை பயமுறுத்துகின்றது. எந்த நேரத்திலும் மயக்கம் ஏற்பட்டுவிடலாம், எந்த நேரத்திலும் மனமுறிவு ஏற்பட்டுவிடலாம் என சிந்திக்கின்றோம். இதனால் நமது நினைவுகள் யாவும் சிந்தித்தலாக மாறிவிடுகின்றன. Thoughts அனைத்தும் Thinking-ஆக மாறிவிடுகின்றன.

நினைவுகள் - Thoughts - தாமாக ஏற்படுகின்றன. தாமாக ஏற்பட்டவை தாமாக மறைந்து விடுகின்றன. நினைவுகளும் அவற்றால் ஏற்படும் துயர உணர்வுகளும் தாமாக ஏற்பட்டு, தாமாக மறைந்துவிடுகின்றன. அவற்றைச்சீரமைக்க நமது முயற்சி எதுவும் தேவையில்லை. அவை சிந்தித்தலாக - Thinking-ஆக மாறும் போதுதான் பலம் பெறுகின்றன. அவற்றைச் சீரமைக்கப் போராடி நாம் தோற்கும் போது அவை மன அழுத்தமாக நமக்குள் பதிவாகி விடுகின்றன; மனோவியாதியாக மாறிவிடுகின்றன.

நினைவையும், சிந்தித்தலையும் (Thought and Thinking) நாம் புரிந்து கொண்டு, நினைவுகளில் குறுக்கிடத் தேவையில்லை என்பதைப் புரிந்துகொள்ளும் போது அனைத்துத் தீர்வுகளும் தாமாக ஏற்படுகின்றன.



## ஸ்ரீ பகவத் மிஷன் செயல்பாடுகளை அறிந்துகொள்ள மற்றும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் நூல்களைப் நேரில் பெற...

★ ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10, பழைய பரோடா வங்கி தெரு,
செக்ரட்ரியேட் காலனி, அம்பத்தூர், சென்னை-600053.
செல் : 9884097438, 9952071525.

★ ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மையம்,
270, பொத்தனூர் ரோடு, முருகன் தியேட்டர் எதிரில்,
பரமத்தி வேலூர், நாமக்கல் Dt.
செல் : 9360579181, 9360110755, 9787253751

★ ஸ்ரீ பகவத் மிஷன், திருப்பூர் மையம்,
ஸ்ரீ பாலகுமரன் நிட்ஸ்,
40, தட்டான் தோட்டம், 4-வது தெரு,
பல்லடம் ரோடு, திருப்பூர்-4.
செல் : 9944044988, 9442215248, 9865623709

★ ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் மையம்,
அம்ருதா ஹோமியோ கிளினிக்,
8A/189, சரஸ்வதி தெரு, அத்வைத ஆஸ்ரமம் ரோடு,
புதிய பஸ் நிலையம் எதிரில், சேலம்-636 004.
செல் : 9488694453, 9894377433, 9443290559

★ ஸ்ரீ பகவத் மிஷன், P. ராஜவேலன், பூரணி கேஸ் ஏஜன்ஸி,
மாரியம்மன் கோவில் அருகில், ஆக்குர் (Po.)
மயிலாடுதுறை வழி, நாகப்பட்டிணம் Dt. Pin : 609 801.
செல் : 9150405092

**தபாலில் பெற :** ★ ப்ரவாகம் பப்ளிகேஷன்ஸ்,
31, இராமலிங்கசாமி தெரு,
அம்மாப்பேட்டை, சேலம்-636 003.
செல் : 97891-65555

## ஸ்ரீ பகவத் ஐயாவுடன் இரண்டு நாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் மிஷன், பரமத்தி வேலூர் மைய அன்பர்கள் நமது பகவத் ஐயா அவர்களுடன் இரண்டு நாள் ஞானமுகாம் ஒன்றை ஏற்பாடு செய்துள்ளனர்.

இந்த ஞான முகாமானது, கரூரில் இருந்து திருமுக்கூடலூர் செல்லும் வழியில் இருக்கும் நெரூரில் காவிரி ஆற்றங்கரையில் அமைந்துள்ள, ஆன்மீகத்தில் புகழ்வாய்ந்த இடமான ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திரரின் ஜீவ சமாதி வளாகத்தில், ஸ்ரீ கைலாஷ் ஆஸ்ரமத்தில் நடைபெற உள்ளது.

மேலும் இவ்விடம் உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்து ஆன்மீக அன்பர்கள் பலரும் வந்து இந்த புகழ் வாய்ந்த ஜீவ சமாதியை தரிசித்துச் செல்லும் இடமாகவும் அமைந்துள்ளது.

இவ்விடத்தில் ஓடும் காவிரி ஆறு காசியின் கங்கையைப்போல வடக்கிலிருந்து தெற்கு நோக்கி பாய்கின்ற சிறப்பை பெற்றிருக்கின்றது.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த புனித ஸ்தலத்தில் ஐயாவின் ஞான முகாம் நடைபெற உள்ளது. ஆர்வமுள்ள அன்பர்கள் ஞானமுகாமில் கலந்து கொண்டு ஐயாவுடன் உரையாடி ஞானத்தெளிவு பெறலாம்.

பெண்கள் தங்குவதற்கென தனி இட வசதி உள்ளது.

ஞானமுகாம் நடைபெறும் நாள் : 29-11-2013 மாலை முதல் 1-12-2013 இரவு வரை

கலந்துகொள்ள ஆர்வமுள்ள அன்பர்கள் முன்பதிவு செய்துகொள்வது அவசியம்.

மேலும் விவரங்களை பெறவும், முன்பதிவு செய்வதற்கும் கீழ்க்கண்ட அலைபேசி எண்ணில் தொடர்புகொள்ளவும். 9245440575, 9942289420, 9360579181

அனைவரும் வருக! ஞானத்தெளிவு பெறுக!

அன்புடன்
ஸ்ரீ பகவத் மிஷன்,
பரமத்தி வேலூர் மையம்

# தியானத்தை விடு! ஞானத்தைப் பெறு!

ஒரு சராசரி மனிதனுக்கு தியானம் மிகவும் அவசியம். சராசரி மனிதனுடைய வாழ்க்கை எப்படி உள்ளது? எப்படியும் வாழலாம் என்ற மனப்போக்கில் அவன் வாழ்ந்து வருகிறான்.

எத்தனையோ இயக்கங்கள் தியானத்தைக் கற்றுக் கொடுக்கின்றன. தியானத்தைப் பழகிவரும் ஒரு சராசரி மனிதனுடைய வாழ்க்கை என்ன ஆகிறது?

இப்படித்தான் வாழவேண்டும் என்ற ஒரு வித்தியாசமான கண்ணோட்டத்துக்கு வந்து விடுகிறான். அவன் செய்யும் தியானம் அவனது ஒவ்வொரு செயலிலும் எதிரொலிக்கிறது.

நோயுற்ற ஒருவரை நோய்நிலையில் அவரது உறவினர்கள் மிகுந்த பதட்டத்துடன் மருத்துவமனைக்கு கொண்டு வருகின்றனர். அவசரமான அறுவை சிகிச்சை செய்தால்தான் அவர் பிழைப்பார் என்ற நிலை.

அந்த உறவினர்களைப் போல் அந்த மருத்துவரும் பதட்டமடைந்தால் அவரால் அறுவை சிகிச்சையில் ஈடுபட முடியுமா?

இப்படி மனப்பதட்டத்துடன் செயல்பட்டு வந்த ஒரு சராசரி மனிதனுக்கு நிதானமாகச் செயல்படும் மன ஆரோக்கியத்தை தியானம் அவனுக்கு வழங்குகிறது.

சராசரி மனிதனை தகுதியுள்ள மனிதனாக மாற்றுவது தியானம்.

ஆனால் அவன் ஞானமடையும் போது தான் அவனது பயணம் பூர்த்தியடைகின்றது.

ஞானம் என்றால் என்ன? தியானம் என்றால் என்ன? இரண்டுக்கும் என்ன தொடர்பு? ஒன்றை ஒன்று சார்ந்திருக்கிறதா? இரண்டும் ஒன்றுக்கொன்று எதிரானவையா?

தியானத்தின் முடிவு என்ன? ஞானத்தின் அவசியம் என்ன? சராசரி மனிதனுக்கு தியானம் சாத்தியப்படலாம்; ஆனால் ஞானம் சாத்தியப்படுமா?

உலகமே புகழ்ந்து கொண்டாடி வரும் தியானத்தில் கூட குறை எதுவும் உள்ளதா?

இத்தனைக் கேள்விகளுக்கும் பதிலாக அமைந்திருக்கும் "தியானத்தை விடு ஞானத்தைப் பெறு" எனும் நூல் எண்ணற்றோரை ஞானிகளாக்கியுள்ளது.

படிப்பவர்களின் ஈடுபாட்டுக்கு ஒத்துழைப்பு கொடுத்து ஊக்குவிக்கும் வகையில் தற்போது எழுத்துக்களின் வடிவத்தைப் பெரிதாக்கி புதிய வடிவில் இந்நூலைக் கொண்டு வந்துள்ளோம்.

இந்நூலின் முதற்பதிப்பை வெளியிட்டு பகவத் அய்யாவின் புதிய அணுகு முறையை உலகத்தின் பல இடங்களுக்கும் பரவச் செய்த சென்னை நர்மதா பதிப்பகத்தாருக்கும் இதன் மூலம் எமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலைப் படித்து பயன்பெற அனைவரையும் அழைக்கின்றோம்.

இந்நூலைப் படித்து பயன் அடைபவர்கள் தங்களது கருத்தை - புரிதலை எங்களுடன் பகிர்ந்து கொள்ளுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

அன்புடன்
பிரவாகம் பப்ளிகேஷன், சேலம்.

## சென்னை மையத்தின் நிகழ்வுகளில் சில...








# சென்னை மையம்

நமது பகவத் மிஷன் சென்னை மையம் 30-9-2012-ல் திறக்கப்பட்டது. இந்த ஓராண்டு காலம், நமது பகவத் மிஷனின் வளர்ச்சியில், ஒரு கணிசமான பங்கை அளித்துள்ளது. திரு. சுகுமார் சீனிவாசன், திரு. T.M.K.தியாகராசன், திரு. M.K.சம்பந்தம், திரு. V.ராஜேந்திரன் ஆகியோரின் சீரிய முயற்சியால் இந்த மையம் சிறப்பாக செயல்பட ஆரம்பித்து விரிவாக்கம் கண்டது.

கடந்த ஓராண்டில் 18 ஆன்மீக பொதுக்கூட்டங்கள் சென்னையின் பல்வேறு இடங்களில் நடத்தப்பட்டன. வேறு எந்த ஆன்மீக அமைப்பும் இந்த அளவு ஆன்மீக பொதுக்கூட்டங்கள், நடத்தவில்லை என்பது ஒரு சிறப்பு. இந்தப் பொதுக் கூட்டங்கள் மூலமாகவும், அவற்றில் விற்பனையான புத்தகங்கள் மூலமாகவும், பகவத் ஐயாவின் தலைசிறந்த ஞானம், சுமார் 10000 பேருக்கு சென்றடைந்திருக்கும் என்று நாங்கள் நம்புகின்றோம். பல்வேறு ஆன்மீக அமைப்புகளில் இருந்து தியானம், யோகம் போன்ற பயிற்சிகளில் ஈடுபட்டு தேடுதலுக்கு முற்றுப்புள்ளி வைக்கமுடியாத சூழலில், மன வெறுமை, தவிப்புடன் இருந்த பல அன்பர்கள் ஐயாவின் ஞானத்தை அவரிடமிருந்தே நேரடியாகக் கற்றபின் அவர்கள் அடைந்த ஆனந்தத்தைக் கண் கூடாகப் பார்க்க எங்களால் முடிந்தது. அதுதானே ஆன்ம சாட்சாத்காரம்!

சென்னை மையம் தனது பணிகளைச் சீருடன் செய்ய நமது மையத்தின் பணிக்குழு உறுப்பினர்கள் தங்களது பங்களிப்பை மனமுவந்து செய்தனர். வருகின்ற காலங்களில் எங்களது பணி மேலும் சீரிய முறையிலும், விரிவாகவும் செய்யப்படும் என்ற தன்னம்பிக்கையுடன் எல்லா ஆன்ம நேய அன்பர்களுக்கும் நன்றியை தெரிவித்துக் கொள்கின்றோம்.

சுகுமார் சீனிவாசன்
தலைவர், ஸ்ரீ பகவத் மிஷன்
சென்னை மையம்

# ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத்தின் ஆண்டுவிழா மற்றும் புதிய அரங்கம் திறப்பு விழா

நாள் : 17-11-2013 ஞாயிற்றுக்கிழமை நேரம் : காலை 10-00 மணி
இடம் : ஸ்ரீ பகவத் மிஷன், சென்னை மையம்,
23/10 பழைய பரோடா வங்கி தெரு, செகரட்ரியேட் காலனி,
அம்பத்தூர், சென்னை-53.

புதிய அரங்கத்தை ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் திறந்து வைத்து சிறப்புரை ஆற்ற இருக்கிறார்கள்.

அனைவரும் கலந்துகொண்டு சிறப்பித்துப் பயனடையுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கின்றோம்.
அனுமதி இலவசம்! அனைவரும் வருக!

# சென்னையில் இரண்டு நாள் ஞான முகாம்

சென்னை ஸ்ரீ பகவத் மிஷனின் புதிய அரங்கில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் 2 நாள் ஞானமுகாம் நடைபெற உள்ளது. நாள் : 23-11-2013 காலை 9-00 மணிமுதல் 24-11-2013 இரவு 7-00 மணிவரை. (Residential Program) வெளியூர் அன்பர்கள் தேவைப்படின் 22-11-2013 அன்று இரவே இங்கு தங்கிக்கொள்ளலாம். ஞானமுகாமில் கலந்துகொள்ள ஆர்வமுள்ளவர்கள் அவசியம் முன்பதிவு செய்யவும். கட்டண விவரங்களுக்கும், முன்பதிவிற்கும் கீழ்க்கண்ட தொலைபேசியில் தொடர்பு கொள்ளவும். செல் : 98840-97438, 99520-71525

அனைவரும் கலந்துகொண்டு சிறப்பித்துப் பயனடையுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கின்றோம்.

சுகுமார் சீனிவாசன்
தலைவர், ஸ்ரீ பகவத் மிஷன்
சென்னை மையம்

குறிப்பு : நமது பகவத் மிஷனின் புதிய இணையதளம் www. sribagavathmission.blogspot.in இதில் பகவத் ஐயாவின் கட்டுரைகள் இடம்பெறும். அன்பர்கள் அனைவரும், இந்த இணையதளத்தைப் பார்த்து அதில் பதிவு செய்து கொள்ளுமாறு வேண்டுகின்றோம்.

## ?கேள்வி பதில்¿

கேள்வி : என் மனதில் தாமாகத் தோன்றும் எண்ணங்களையும், உணர்வுகளையும் அவற்றின் போக்கில் விட்டுவிடுகிறேன். இதனால் மனதளவில் விடுதலையாகத் தான் இருக்கிறேன். அகத்தைப் பொறுத்த அளவில் நிறைவாக இருக்கிறேன். மேலும் நடைமுறை வாழ்க்கையில் குடும்ப உறுப்பினர்களுக்கு என்னால் முடிந்த வரை உதவியும், நன்மையும் செய்துதான் வருகிறேன். ஆனால் அவர்கள் அதை சரியாகப் புரிந்துகொள்ளாமல் என்னை திட்டுவதுடன், வருத்தப்படும்படியாகவும் நடந்துகொள்கிறார்கள். இதனால் என் மனம் மிகவும் வேதனை அடைந்துவிடுகிறது. இந்தப் புறச்சூழ்நிலையை எப்படி நான் எதிர்கொள்வது?

பதில் : நீங்கள் மனதின் அக, புறச் செயல்பாடுகளை நன்றாகப் புரிந்துகொண்டு செயல்பட்டால் உங்கள் சூழ்நிலையை நீங்கள் மாற்றி அமைத்துக்கொள்ளலாம்.

உங்கள் மனதில் தாமாகத் தோன்றும் எண்ணம், உணர்வுகளை அவற்றின் போக்கில் போகவிடுவதுதான் அகப்புரிதல் ஆகும். அதனால் நீங்கள் மனதளவில் நிறைவாக இருக்கிறேன் என்று கூறுகிறீர்கள். ஆனால் நடைமுறை வாழ்வு என்பது புற இயக்கம் ஆகும். அதைப் பற்றிய புரிதலும் தேவைப்படுகிறது.

நமது மனதில் தாமாகத் தோன்றும் எண்ணம், உணர்வுகள் தவிர மற்றபடி நாமாகச் சிந்திப்பது, பேசுவது, செயல்படுவது என அனைத்துமே புற இயக்கம் தான். நடைமுறை வாழ்வு என்று வருகிறபோது நாம் பலரோடும் சேர்ந்து இணைந்து செயல்பட வேண்டியுள்ளது. நாம் மற்ற அனைவருடனும் சேர்ந்து இணக்கமாகவும், உதவியாகவும் செயல்படும்போது தான் நடைமுறை வாழ்வு சிறப்பானதாக அமையும்.

உதாரணமாக நடைமுறை குடும்ப அமைப்பில் அப்பா, அம்மா, கணவன், மனைவி, குழந்தைகள், உறவினர்கள் என எல்லோரிடமும் தொடர்பு கொண்டு வாழ வேண்டியுள்ளது. இதில் நாம் தொடர்பு கொள்ளும் ஒவ்வொரு நபருக்கும் ஒவ்வொரு விதமான இயல்பும், மனப்பதிவுகளும் (அனுபவங்களும்) இருக்கும். அவர்களுடைய இயல்பிற்கும், மனப்பதிவுகளுக்கும், அனுபவத்திற்கும் ஏற்றபடி தான் அவர்கள் நம்மிடம் நடந்து கொள்வார்கள். அப்படி அவர்கள் நடந்துகொள்வது அனைத்தும் நமக்குப் பிடித்தமானதாகவும், ஏற்புடையதாகவும் இருக்கும் என்று கூறிவிட முடியாது.

மனதின் இயக்கத்தைப் புரிந்துகொண்ட நாம் தான் அவர்களின் செயல்பாடுகளை ஏற்றுக்கொண்டு, முடிந்தவரை அனுசரித்து, அமைதியாகவும், நிறைவாகவும் வாழ்க்கையை வாழவேண்டும்.

ஓர் இளம் வயது பெண்மணி மனதைப் பற்றிய நல்ல புரிதல் இருந்தும், தன்னுடைய மாமியாரைப் பற்றி பல குறைபாடுகளை கூறினார். அந்த பெண்மணிக்கு உடல்நிலை சரியில்லாத போதும் கூட மாமியார் அவருக்கு பல்வேறு துன்பங்களைக் கொடுத்ததாகவும், பல சிக்கல்களை உருவாக்கியதாகவும் கூறினார். மேலும் “நான் எனது மாமியாருக்கு தேவையான உதவிகளைச் செய்து கொண்டு தான் இருக்கிறேன். ஆனால் மாமியார்தான் என்னைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை” என்றார். இதைப் பற்றி எனது கணவரிடம் கூறினால் "எனது தாயார் அப்படிதான், அவர்கள் பழைய காலப்படி தான் நடந்துகொள்வார்கள். நீ தான் அவர்களை அனுசரித்துப் போகவேண்டும்" என்கிறார். அதனால் கணவரிடம் அவரின் செயல்பாடுகளைப் பற்றி எதுவும் கூறுவது கிடையாது. இப்படிப்பட்ட சூழ்நிலையை நானே முழுவதுமாக எதிர்கொள்வதால் மனக்கொதிப்புகளை தவிர்க்கமுடியவில்லை. இதிலிருந்து நான் எப்படித்தான் மீண்டு வெளிவருவது? எனக்கு சரியான ஆலோசனையை கூறுங்கள் எனக் கேட்டுக்கொண்டார் அந்த பெண்மணி.

அந்த இளம் பெண்மணியிடம் "உங்களைப் பற்றி உங்களது மாமியாரிடம் விசாரித்தால் என்ன கூறுவார்கள்?" எனக்கேட்டேன். "நிச்சயமாக நான் சரியில்லை என என்மீதான எல்லா குறைகளையும் கூறுவார்" என்றார் பெண்மணி.

நடைமுறை வாழ்க்கையில் ஒவ்வொருவரும் அவர்களுடைய இயல்புக்கும், மனப்பதிவுகளுக்கும் அனுபவங்களுக்கும் ஏற்றபடிதான் நடந்துகொள்வார்கள். இப்படி அவர்கள் நடந்து கொள்வது உங்கள் விருப்பத்திற்கு மாறாகவும், முரண்பாடாகவும் தோன்றும்பட்சத்தில் உங்களுக்கு மனப்பாதிப்பு வருவது தான் நியாயம். மனப் பாதிப்பு வராமல் இருந்தால் தான் தவறு. உங்களுக்கு ஏற்படும் மனப்பாதிப்பு உங்களின் கவனத்திற்கு வராமல் இருக்கும் வரை அந்த மனப்பாதிப்பை எதிர்த்து நீங்கள் உங்களை அறியாமலேயே செயல்பட்டிருந்தாலும் அதில் எந்தத் தவறும் கிடையாது.

எந்த நிலையில் உங்களது மனதின் கவனத்திற்கு அவர்கள் ஏற்படுத்திய மனப்பாதிப்பை உணரமுடிகிறதோ அதற்கு பிறகு நீங்களாக அந்த மனப்பாதிப்பை எதிர்த்து எதுவும் செய்யத்தேவையில்லை. நீங்களாக மனப்பாதிப்பை உணர்ந்த நிலையில், அதை எந்த வகையிலும் சீரமைக்கவோ, மாற்றவோ முயற்சி செய்யாத நிலையில் மனப்பாதிப்பு தாமாகவே மறைந்துவிடும்.

ஒரு நடைமுறை உதாரணத்தை புரிந்துகொள்வதன் மூலம் புற சூழ்நிலையை எப்படி எதிர்கொள்வது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். நாம் காரில் பயணம் மேற்கொள்ளும்போது A/C, Power Steering, Power window என எல்லா வசதியும் கூடிய ஒரு காரிலேயே பயணம் செய்ய நாம் விரும்புவோம்.

ஆனால் மேற்கண்ட எந்த வசதியும் இல்லாத மிகவும் சாதாரணமான காரில் நாம் பயணம் மேற்கொள்ளவேண்டிய சூழ்நிலையில் தான் நம் நடைமுறை வாழ்க்கை அமைந்துள்ளது என வைத்துக்கொள்வோம்.

எந்த வசதியும் இல்லாத சாதாரண காரில் அமர்ந்துகொண்டு A/C இல்லையே, Power Steering இல்லையே, Power window இல்லையே, என்று புலம்புவதால் எந்த முன்னேற்றமும் ஏற்படப் போவதில்லை. இந்த காரில் இருக்கும் அடிப்படை வசதியைத் தவிர வேறு எந்த விதமான வசதிகளும் கிடைக்காது என்பதை புரிந்துகொண்டு நாம் தான் அமைதி அடைய வேண்டும். இந்த அடிப்படை வசதி மட்டும் உள்ள காரில் நாம் எப்படி சிறப்பாக பயணம் மேற்கொள்ளலாம் என்பதற்கான எல்லா வழிமுறைகளையும் பின்பற்ற வேண்டும்.

இதுபோல் தான் நடைமுறை வாழ்வில் நம் குடும்ப உறுப்பினர்கள் நம்மைப் புரிந்துகொள்ளவில்லையே, அங்கீகரிக்கவில்லையே, அனுசரித்துப் போகவில்லையே, பாராட்டவில்லையே என்று புலம்புவதால் அவர்களிடம் எந்த மாற்றமும் ஏற்படப்போவது இல்லை; பிணக்கும், பிரச்சினையும் தான் அதிகரிக்கும்.

எனவே, நடைமுறை வாழ்வில் நமக்கு பிரச்சினை ஏற்படுத்தக் கூடியவர்கள் யாராக இருந்தாலும், அவர்களை மனநிலை பாதிக்கப்பட்டவர்களாகக் கருத்தில் கொண்டு முடிந்தவரை அவர்களை அனுசரித்துப் போகவேண்டும். இப்படி அனுசரித்துப் போவது மட்டுமே அவர்களை முழுமையாக அங்கீகரித்தது ஆகும். அவர்களை எதிர்த்து பலமணிநேரம் போராடுவதை விட அவர்களை அப்படியே ஏற்றுக்கொண்டு செயல்படுவதால் மிக விரைவில் தீர்வு பெறலாம். மனதின் இயக்கத்தைப் புரிந்து கொண்ட நமக்கு, நடைமுறையில் தொந்தரவு கொடுப்பவர்களையும் ஏற்றுக்கொண்டு செயல்படுவது தான் புரிதலின் சிறப்பாகும்.

நாம் யதார்த்த வாழ்வில் மற்றவர்களுடன் தொடர்பு கொள்ளும்போது நல்ல செயலுக்கு நமது ஆதரவையும், ஊக்கத்தையும் வழங்கி, தேவையற்ற செயலுக்கு அமைதியையும், மௌனத்தையும் கடைபிடித்து வாழ்வதே சிறப்பான வாழ்விற்கான வழிமுறையாகும்.

"அகத்தில் எதுவும் செய்யமுடியாது என்ற புரிதலுடன் புறத்தில் மற்றவர்களின் இயல்பை திருத்துவதைவிட அவர்களை அப்படியே ஏற்று வாழ்வதே சிறப்பான நடைமுறை வாழ்வாகும்."

V.A.P. சரவணன், சேலம்
செல் : 99942-05880

## ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

நமது பகவத் பாதையின் இனிய பயணத்தில் இந்த இதழோடு இரண்டாண்டுகள் நிறைவடைகின்றன.

இதுவரை நமது பகவத் பாதை ஞான இதழ் ஆயிரக்கணக்கான இல்லங்களைச் சென்றடைந்து பல உள்ளங்களுக்கு ஞானத்தெளிவை கொடுத்திருக்கின்றது.

நமது இதழைத் தொடங்கும்போது இது எவ்வாறு பயணிக்கும் என்பதை அறியாமல் இருந்தோம். உண்மையில் நமக்குள் ஓர் உறவு மலரவேண்டும் என்பதற்காகவே தொடங்கினோம். இருப்பினும் இவ்விதழ் பல உன்னதமான பணிகளைச் செய்யும் என்று நம் உள் உணர்வு உணர்த்தியது.

அதுபோலவே நமது மாத இதழ் பல உன்னதமான உயர்ந்த பணிகளை செவ்வனே செய்து கொண்டிருக்கிறது.

ஆன்மிகத்தின் மிக உயர்ந்த நிலையான ஞானத்தை ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் சிந்தனையில் மலர்ந்த புதிய அணுகுமுறையால் எளிமையாக்கி அனைவருக்கும் கொண்டு சேர்த்துக் கொண்டிருக்கிறது.

ஆன்மிகம் வேறு, உலகியல் வேறு என்று இதுவரை இருந்துவந்த நிலையை மாற்றி இவ்விரண்டும் இணைந்த இனிய வாழ்வுக்கான புரிதலை கொடுத்திருக்கிறது.

மேலும் இதுவரை மறைபொருளாய் இருந்துவந்த சாஸ்திரங்களின் உட்பொருளை விளங்க வைக்கும் விளக்காகவும், ஆன்மிகத்தில் இதுவரை பதில்கிடைக்காத பல கேள்விகளுக்கு பதிலாகவும் அமைந்துவிட்டது இப்புரிதல்.

அன்பர்கள் பலர் நமது மாத இதழை மாதந்தோறும் எதிர்ப்பார்த்து காத்திருந்து படித்து பாராட்டி கொண்டிருந்தாலும் நமது இதழில் வரும் கட்டுரைகள், கேள்வி - பதில்கள் மற்றும் ஜென்கதைகள் என அனைத்தும் பல அன்பர்களின் அன்றாடப் பிரச்சினைகளை எளிதாக எதிர்கொள்வதற்கான புரிதலைக் கொடுத்து அவர்கள் அனைவரையும் ஞானிகளாக்கியுள்ளது என்பதே நமது இதழின் சிறப்பு.

இவை அனைத்தும் நமது முயற்சியால் நடந்தேறியது என்று கூறுவதை விட இந்த நூற்றாண்டுக்கான இயற்கையின் திட்டம் என்றே எண்ணத் தோன்றுகிறது.

எனவே நமது பகவத் பாதை உலக மக்கள் அனைவரையும் சென்றடைய நாம் அனைவரும் இயற்கையின் கருவியாக இருந்து செயல்படுவோமாக...

அன்புடன், K.S. ஜீவமணி, ஆசிரியர்,
செல் : 97891-65555

# ஜென் கதை

## பற்று

ஆழ்ந்த தேடல் வேட்டையில் ஒருவர் ஈடுபட்டிருந்தார். ஞானவேட்கை அவரிடம் நிரம்பியிருந்தது. எதை எதைக் கேள்விப்படுகிறாரோ அதையெல்லாம் முயன்று பார்ப்பதே அவரது செயலாக இருந்தது.

பற்றுகளைத் துறப்பதே ஞானவாயிலின் திறவுகோல் என்றனர் பலர். அவர் தன் உடைமைகளை உதறினார். தன் சொத்துக்களை உதறினார். இருக்கும் இடம் என்று கூட ஒரு பற்றுதல் கூடாதென்று ஊர் ஊராக அலைந்து திரிந்தார். அப்படியும் அவர் மனம் அமைதி பெறவில்லை.

வழியில் ஒருவரைச் சந்தித்தார். அவர் முகத்தில் நிலவிய சாந்தமும் கண்களில் தென்பட்ட அமைதியும், அவர் ஒரு ஜென்குரு என்பதை உணர்த்தின. அந்த குருவை வணங்கினார்.

"குருவே! நான் ஞானத்தைத் தேடி அலைகிறேன்!" என்றார்.

"அப்படியா?" என்றார் குரு.

"ஆம். நான் பாசங்களை உதறிவிட்டேன். உடைமைகளை உதறிவிட்டேன். பற்றுகளைத் துறந்துவிட்டேன். அப்படி எல்லாவற்றையும் உதறிய பிறகும் கூட என் மனம் அமைதி அடையவில்லை. எப்படி தான் நான் அமைதி அடைந்து ஞானத்தை புரிந்துகொள்வது?" என்றார்.

'எல்லாவற்றையும் உன்னை உதறச் சொன்னது யார்?' என்றார் ஞானி.

'நான் இதுவரை படித்த ஞான நூல்களும், பல மகான்களின் வாழ்க்கை வரலாறும்' என்றார்.

'அவைகள் சரியானவை தான், நீ தான் தவறாகப் புரிந்து கொண்டாய்' என்றார் ஞானி.

'அப்படியானால் எப்படிதான் சரியாகப் புரிந்து கொள்வது?' என்றார்.

"நீ புரிந்துகொள்ள வேண்டியதே மனதின் இயலாமையைத்தான். நீ உதறியது அனைத்தும் புறவயமான பற்றுக்களை.

ஆனால் நீ உதற வேண்டியது உன் மனப் பற்றுகளை மட்டுமே" என்றார் ஞானி.

"சாமி எவ்வாறு மனப் பற்றுகளை உதறுவது என்பதை விளக்கமாகக் கூறுங்கள்" என்றார்.

"உன் மனத்தின் இயக்கம் என்பது உன் உடலின் அக உறுப்பின் இயக்கம் போன்றது. அது உனக்கு கட்டுப்பட்டது கிடையாது. உன் மனதின் இயக்கத்தை உன்னால் கட்டுப்படுத்த முடியாது என்ற இயலாமையைப் புரிந்துகொண்டு உன் முயற்சியைக் கைவிடுவதே மனதைத் துறப்பதாகும்".

"இதைத் தெளிவாகப் புரிந்துகொண்டால் பற்றுகளை உனது நடைமுறை வாழ்க்கைக்கு தகுந்தாற்போல் பயன்படுத்திக்கொள்ளலாம்; எதையும் உதறவேண்டியது இல்லை. இதைப் புரிந்து கொள்வதே ஞானம்" என்றார் ஞானி.

புரிந்துக்கொண்டார், எல்லாவற்றையும் உதறியவர்.

"புரிந்துகொள்ள வேண்டியதை புரிந்துகொண்டால் வேறு எதையும் உதற வேண்டியதில்லை"






**Book packet** containing printed books

*If undelivered please return to:*




Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com

To

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India. Printed by Sri Jayavel Press, Gandhi Maidanam, Ammapet, Salem-636 003. Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555.